# வள்ளலாரும் அருட்பாவும்

முத்தமிழ்க் காவலர், கலைமாமணி
**டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம் டி. லிட்.**

பாரி நிலையம்
184. பிராட்வே · சென்னை · 600108

சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்

## டாக்டர் ஜி. ஆர். தாமோதரன் அவர்கள்

# அணிந்துரை

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிச் சமய ஆன்மீக உலகிலும், தமிழ்க் கவிதையுலகிலும் பெரும் புரட்சி செய்தவர் வடலூர் திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க சுவாமிகள் ஆவர். அன்றாட வாழ்வில் அவதிப்பட்டு நிற்கும் மக்களின் துன்பங்களைக் கண்டு மனம் வருந்தியிருக்கின்றார். 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்' வாடினார். சமுதாயத்தில் மலிந்து போயிருந்த 'கண்மூடிப் பழக்கங்கள் மண்மூடிப் போக வேண்டும்' என்று கடுமையாகச் சாடினார். 'நலிதரு சிறு' தெய்வங்களுக்கு முன் வாயில்லாத சீவராசிகளாம் ஆடு, கோழி முதலியன பலியிடப்படுவதைக் கண்டும் உளம் கொதித்தார். வலைஞர் வலைகொண்டு மீன்பிடிக்க நீர் நிலை நோக்கிச் சென்ற போதுகூட அவர் உள்ளம் திடுக்கிட்டுத் துடித்தது, வறுமையால் வாடும் மக்களின் பசிப் பிணியினைத் தீர்ப்பதற்கு வழிகாண வேண்டுமென்று கருதினார். உண்மைத் துறவியான அவர், வடலூரில் சத்திய தருமச்சாலையினை அமைத்து 'பசி' என்று வந்த ஏழை எளியவர்க்குப் 'புசி என்று கூறி அன்னமிட்டார். சாதிச் சண்டையிலும், கோத்திரக் குப்பையிலும், சமயச் சழக்கிலும் ஆழ்ந்து கிடந்த மக்களைக் கரையேற்றிவிட சத்திய சன்மார்க்க சங்கம் கண்டார்.

தமிழ்க் கவிதையுலகிலும் அவர் செய்த புரட்சி மகத்தானது. ஏறத்தாழ ஆறாயிரம் பாடல்களை இயற்றிய அவர், ஆன்மநேய ஒருமைப்பாட்டினை வலியுறுத்தினார். எல்லோரும் இனிது வாழவேண்டும் என்று அவர் கொண்ட கோட்பாடு உலகளாவிய உயர்ந்த கோட்பாடு ஆகும். அஃது 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற கணியன் பூங்குன்றனார் வழியில் வந்த—உலகத்தையெல்லாம் ஒன்றாக இணைக்கக்கூடிய உயரிய பண்பாடாகும். 'நாடெல்லாம் வாழக் கேடொன்றுமில்லை' என்று கண்ட

அவர், சமரச சன்மார்க்கம் என்னுங் கொள்கையினை வலியுறுத்தினார். இவ்வுலகிலே வாழவேண்டிய நெறியில் வகையுடன் வாழ்ந்தால் 'மரணமிலாப் பெருவாழ்வு' கிட்டும் என உறுதியாக அவர் நம்பினார். 'உயிரிரக்கம்' என்பதே அவர் உயிர்க்கொள்கையாக இருந்தது. 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்டத்து மரபில்' ஒருவராய் வந்த அவர், ஒருமையுடன் இறைவன் திரு மலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவை வேண்டினார். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத உத்தமர்தம் உறவை நாடினார். இவ்வாறு வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் உண்மை தெளிந்து உணர்ந்த ஞானியாக அவர் வீறுடன் விளங்கினார்.

இத்தகைய சான்றோரைக் குறித்து 1980-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 9, 10 தேதிகளில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் முத்தமிழ்க் காவலர் டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவு இப் பொழுது நூல் வடிவில் வெளிவருகிறது. திருச்சி தந்த சிறந்த பெரியோர்களில் ஒருவர் நம் முத்தமிழ்க் காவலர் ஆவர். அரசியல் உலகிலும், சமுதாய உலகிலும், தமிழ் உலகிலும் அவர்கள் ஆற்றிய பணிகள் பல. ஆயிரம் ஆயிரம் மேடைகள் ஏறி, அரிய கருத்துக்களைப் பரப்பும் சிறந்த சொற்பொழிவாளராகவும், எளிய தமிழில் இனிய முறையில் பல அரிய நூல்களை எழுதிய ஆசிரியராகவும் விளங்கும் இவர்கள், ஆயிரம் பிறை கண்ட அண்ணலார் ஆவர். தமிழ்மொழிக்கும், தமிழினத்திற்கும், தமிழ் நாட்டிற்கும் தக்க வகையில் தொண்டாற்றிவரும் இப் பெரியாரை வைணவ மரபில் வாழ்த்தப் பெறுவது போல, 'இன்னும் ஒரு நூற்றாண்டு இரும்' என வாழ்த்துகிறேன். இச்சிறிய—ஆனால் சீரிய நூலினைத் தமிழ்கூறு நல்லுலகம் ஏற்றுப் போற்றுவதாக. வாழ்க நூலாசிரியர் முத்தமிழ்க் காவலர்! வளர்க அவர்தம் தொண்டு!

சென்னை-5 }
26-11-80 }

ஜி. ஆர். தாமோதரன்

# வள்ளலார்

## 1. வள்ளலார் யார்?

உலகில் உள்ள மதங்கள் நூற்றுக்கு மேற்பட்டவை என்றும், அவற்றுள் மிகப் பெரிய மதங்கள் ஒன்பது என்றும் சமயவாதிகள் கூறுகின்றனர். அவை இந்து மதம், புத்த மதம், சமண மதம், கிறிஸ்து மதம், இஸ்லாம் மதம், பார்சி மதம், சைவம், வைணவம், சன்மார்க்கம் என்பன. இவை அனைத்தும் நாம் வாழ்கின்ற இதே ஆசியாக் கண்டத்தில் தோன்றியவை. இதனால் நல்லறிஞர்கள் ஆசியாக் கண்டத்தினைக் குறிப்பிடும் போதெல்லாம் "ஞானம் பிறந்த கண்டம்". "ஞானம் பிறந்த கண்டம்" என்று கூறுவதுண்டு.

அதிலும் ஆறு மதங்கள் நம் இந்தியாவிலேயே பிறந்தவை. அதிலும் மூன்று மதங்கள் தமிழகத்திலேயே தோன்றியவை. அவை, சைவம், வைணவம், சன்மார்க்கம் என்பன. இவற்றில் சன்மார்க்க சமயத்தைத் தோற்றியவர் நம் வள்ளலார்.

பொருளை வாரி வழங்கியவர்கள், "பொருள் வள்ளல்கள்"; அருளை வாரி வழங்கியவர்கள் "அருள் வள்ளல்கள்". இத்தகைய அருள் வள்ளல்கள் பலர். அவர்களில் 'வள்ளலார்' என்ற பெயரையே பெற்றுத் திகழ்பவர் நம் வள்ளலார்.

பெயர்—இராமலிங்க அடிகள்.

பெற்றோர்—சின்னம்மையார், இராமையா பிள்ளை.

பிறந்த நாள்—1-10-1823.

பிறந்த ஊர்—சிதம்பரத்திற்கு வடக்கில் உள்ள மருதூர்.

உடன் பிறந்தோர்—சபாபதிப் பிள்ளை, பரசுராமப் பிள்ளை.

**2. வாழ்ந்த ஊர்கள்**

பெரும்பாலும் சென்னையும், வடலூரும், வாழ்ந்த ஆண்டுகள் 1823 முதல் 1874 வரை, 51 ஆண்டுகள்.

**3. வாழ்ந்த இடமும் வயதும்**

கந்தகோட்டத்தில் ஒரு வயது முதல் பன்னிரண்டு வயது வரை. திருவொற்றியூரில் 12 முதல் 35 வயது வரை. சிதம்பரத்தில் 35 முதல் 44 வயது வரை. வடலூரில் 44 முதல் 47 வயது வரை. சித்தி விளாகத்தில் 47 முதல் 51 வயது வரை.

**4. ஆசிரியர்கள்**

காஞ்சிபுரம் மகா வித்துவான் சபாபதி முதலியார், உடன் பிறந்த தமையன் சபாபதிப் பிள்ளை முதலியோர்.

**5. மாணாக்கர்கள்**

தொழுவூர் வேலாயுத முதலியார், பொன்னேரி, சுந்தரம் பிள்ளை, இறுக்கம் இரத்தின முதலியார், பண்டாரம் ஆறுமுக ஐயா, காயாறு ஞானசுந்தரம் ஐயா ஆகியோர்.

## 6. அவர் காலத்தில் வாழ்ந்தவர்கள்

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, யாழ்ப் பாணம் ஆறுமுக நாவலர், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், அட்டாவதானம் கலியாணசுந்தர முதலியார், மாயூரம் முனிசிப் வேத நாயகம் பிள்ளை, அட்டாவதானம் சபாபதி முதலியார், மகாவித்துவான் தணிகாசல முதலியார் போன்றவர்கள்.

## 7. தோற்றம்

துறவியாக, ஞானியாக, புலவராக, கவிஞராக, சொற் பொழிவாளராக, எழுத்தாளராக, நூலாசிரியராக, உரை யாசிரியராக, ஞானாசிரியராக, போதகாசிரியராக, மருத்து வராக, சித்தராகக் காட்சியளித்தவர்.

## 8. அவர் கண்டவை

ஒரு தனிக் கொள்கையை, தனி மார்க்கத்தை, தனிக் கொடியை, தனிச் சபையை, தனி மந்திரத்தை, தனி வழி பாட்டைத் தனிமுறையாகக் கண்டவர்.

## 9. அவரது தொண்டுகள்

திருக்குறள் வகுப்பு, முதியோர் கல்வி, மும்மொழிப் பாடசாலை, கல்வெட்டு ஆராய்ச்சி.

## 10. செயற்கருஞ் செயல்கள்

நாம் எண்ணங்களைக் கோடிக் கணக்கில் எண்ணு கிறோம். திருவள்ளுவரோ, "அடுத்த நிமிடம் உயிர் வாழ்வதை அறியமாட்டார்கள். அவர்கள் எண்ணங்களைக் கோடிக்கு மேல் எண்ணுகிறார்கள்" எனக் கூறுகிறார்.

ஒருபொழுது வாழ்வதறியார் கருதுப
கோடியும் அல்ல பல என்பது குறள்.

ஆக, நாம் எண்ணங்களைக் கோடிக் கணக்கில் எண்ணு கிறோம். எழுத்துக்களை இலட்சக்கணக்கில் எழுது கிறோம். பேச்சுக்களை ஆயிரக்கணக்கில் பேசுகிறோம். கொள்கைகளை நூற்றுக் கணக்கில் கூறுகிறோம். திட்டங் களைப் பத்துக் கணக்கில் வகுக்கிறோம். ஆனால் செயலில் ஒன்றையாவது உருவாகச் செய்வதில்லை. வள்ளலாரோ பல செயல்களை, அதுவும் செயற்கருஞ் செயல்களைச் செய்து முடித்தவர்.

சத்திய தருமச்சாலை, சத்திய ஞான சபை, சத்திய ஞான சமரச சன்மார்க்க சங்கம், இம் மூன்றையும் தோற்றுவித்து, செவ்வையாக நடத்தி, என்றும் நின்று நிலவச் செய்திருப்பது அவர் செய்த செயற்கருஞ் செயல் களாகும்.

யார் பெரியர் என்ற கேள்விக்கு வள்ளுவர் கூறுகிற விடை "பணத்தரல்லர், நிலத்தரல்லர், எழுத்தரல்லர், பேச்சரல்லர், வயது முதிர்ந்த கிழவர்களும் அல்லர், பிறராலே செய்தற்கரிய காரியங்களைச் செய்பவரே பெரியர்" என்பது. இதனை : "செயற்கரிய செய்வர் பெரியர்" என்ற குறளால் அறிய முடிகிறது. அத்தகைய பெரியர் "வள்ளலார்".

## 11. சித்த மருத்துவர்

சித்தர் வேறு, முத்தர் வேறு. சித்தி அடைந்தவர் சித்தர்; முத்தி அடைந்தவர் முத்தர்.

சித்தி என்பது நிலை சேர்ந்த அனுபவம்
முத்திஎன்பது நிலை முன்னுறு சாதனம்

என வள்ளலாரே கூறியுள்ளார்.

1. வள்ளலார் சித்த மருத்துவராகவும், சித்தராகவும் இருந்து உடற்பிணிக்கும், மனப்பிணிக்கும் மருந்து கூறிய வர். ஞான மருந்து இம் மருந்து—சுகம் நல்கும் வைத்திய நாத மருந்து சுத்த சன்மார்க்க மருந்து, அருட்சோதி மலையில் துலங்கும் மருந்து, சித்துருவான மருந்து' எனைச் சிந்தெல்லாம் செயச் செய்வித்த மருந்து'' என்ற அவருடைய பாடல் இவற்றை மெய்ப்பிக்கிறது.

2. பெற்ற உடம்பு சாகடிப்பதற்காக அல்ல என்பது சித்தர்கள் கண்ட முடிவு. 'இதற்குச் சாகாக் கலை' என்று பெயர்.

நந்தவனத்தி லோர் ஆண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தான் ஒரு தோண்டி—அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி

என்பது ஒரு சாகாக்கலைப் பாடல். நந்தவனத்தில் ஓர் ஆண்டி-உலகத்தில் ஒரு ஆன்மா. நாலாறு மாதமாய்-நாலும் ஆறும், பத்து மாதமாய் தாய் வயிற்றிலிருந்து, குயவனை வேண்டி—பிரம்மாவை வேண்டி. கொண்டு வந்தான் ஒரு தோண்டி—இந்த உடம்பு. இதைப் பாதுகாக்கத் தெரியாமல் உலக இன்ப துன்பங்களில் உழன்று, கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி — சாகடித்தாண்டி, என்பது, இதன் பொருள். இந்தக் கலையெலாம் கற்றவர் நம் வள்ளல்.

3. பொன் செய்யும் ஆற்றலையும் படைத்தவர். அவர் உடம்பில் முகத்தைத் தவிர பல பகுதிகள் பொன் மயமாய் இருந்து ஒளிவீசின என்பதை அவர் காலத்தில் வாழ்ந்தவர் கண்டுள்ளனர். இது அவர் முகத்தைத் தவிர மற்ற இடங்களை மூடி மறைத்திருந்ததாலும் தெரிய வரு

கிறது. இவற்றைப் "பொன் வடிவம் தனையடைந்து களித்தேன்" என்ற அவரது வாக்கும், "பொன்னுடம்பு எனக்குப் பொருந்திடும் பொருட்டு என்னுளம் கலந்த என் தனியன்பே" என்று அவர் இறைவனை நினைந்து உருகிப் பாடிய பாடலும் மெய்ப்பிக்கின்றன.

12. வியப்புக்குரியவை

1. ஓராண்டுப் பருவத்திலே தில்லையில் திரை தூக்கத் தரிசித்தது.

2. திண்ணையிலிருந்து புரண்டு கீழே விழுந்தபோது விழாமல் தடுத்து இறைவி காப்பாற்றியது.

3. ஐந்து வயதில் பள்ளிக்குச் சென்றும் படிப்பில் கவனமில்லாது இறை நினைவே கொண்டிருந்தது.

4. ஒன்பது வயதில் அவரது ஆசிரியர்.

ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்,
மாதாவை ஒரு நாளும் மறக்க வேண்டாம்,
வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்

என உலக நீதியைச் சொல்லச் சொல்லியும் இவர் சொல்லா திருந்தார். "ஏன் சொல்லவில்லை?" என்று ஆசிரியர் கேட்டபோது, "இறைவனிடத்திலே வேண்டாம் வேண்டாம்" என்று சொல்லிக் கொண்டிருப்பானேன். "ஏதாவது வேண்டும், வேண்டும்" என்று எதை வேண்டலாம் என எண்ணிக் கொண்டிருந்தேன்" என்றார்.

"நீ வேண்டுமானால் வேண்டும் வேண்டும் எனப்பாடு" என்று ஆசிரியர் கட்டளையிட. உடனே "ஒருமையுடன் நினது திருமலரடி நினைகின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்; உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்" என்ற பாடலைப் பாடியது.

5. பட்டினியோடு திண்ணையில் படுத்து உறங்கிய போது, அண்ணியார் வடிவில் வந்து இறைவி அவருக்கு உணவளித்தது.

6. சிறு வயதிலேயே துறவு பூண்டு மீண்டது.

7. இளமையில் அண்ணன் சொற்பொழிவுக்கு ஏடு படிக்கத் தொடங்கி, அவர் ஒப்புக் கொண்ட சொற்பொழி வுக்கு நோய்வாய்ப்பட்டுப் போக முடியாதிருந்த போது, தான் சென்று அக்சொற்பொழிவை நிகழ்த்தி, மக்களின் பாராட்டைப் பெற்றது.

8. பிறகு ஊர் மக்கள் அவர் தமையனிடம் சென்று, இனித் தம்பியையே சொற்பொழிவுக்கு அனுப்புங்கள் என்று கேட்கும் நிலை வந்தது.

9. திருவொற்றியூரில் வள்ளலார் நடந்து சென்ற போது, ''இதோ ஒரு மனிதன் போகிறான்'' என்று ஒரு ஞானி மகிழ்ந்து கூறியது.

10. தண்ணீரில் விளக்கு எரித்தது.

11. ஒரே இரவில் 1596 வரிகளையுடைய அருட் பெருஞ்சோதி அகவலைப் பாடி முடித்தது.

12. பொருளாசை சிறிதும் கொள்ளாது, ''பணத் திலே சிறிதும் ஆசை ஒன்றிலேன், நான் படைத்த அப் பணங்களை பலகால் கிணற்றிலே எறிந்தேன், குளத்திலும் எறிந்தேன், கேணியில் எறிந்தனன் எந்தாய்'' என்று கூறிப் பணத்தை எறிந்து வந்தது.

காராலும், கனலாலும், காற்றாலும், ககனக் கலை
தடுக்கப் படுதலிலாத் தனி வடிவம் அளித்தாய்!

எனவும்,

'இறவா வரம் அளித்து என்னை மேல் ஏற்றினாய்'

'சாகா நிலை இது தந்தனம் உனக்கே' என்றாய்,

'எல்லாம் வல்ல சித்து எனக்கு அளித்தாய்'

'அற்புதம் இயற்று! அதிசயம் இயற்று!' என்றாய்

எனவும், அவரே இறைவனிடம் கூறி மகிழ்ந்தது.

இவை அனைத்தும் நம்மை வியப்படையச் செய்வன.

13. சீர்த்திருத்தக்காரர்

1. ஏழை, பணக்காரர், மேல்சாதி, கீழ்சாதி முறைகளைக் கண்டித்தவர்.

2. சமய வேற்றுமைகளைச் சாடியவர்.

3. புராண இதிகாசங்களை வெறுத்தவர்.

4. கோவில் கட்டியவன் கோவிலுக்குப் போகாத நிலையையும், குளம் வெட்டியவன் தண்ணீர் எடுக்க முடியாத நிலையையும் தாக்கி, ஒரு பெரும் புரட்சியைச் செய்தவர்.

5. மாயூரம் முனிசீப் வேதநாயகம்பிள்ளை பாடிய நீதி நூலுக்குச் சாற்றுக்கவியும் வழங்கி மகிழ்ந்தவர்.

14. அவரது வரலாற்றை அறியத் துணைபுரிவன :

1. திருவருட்பாவில் காணப்பெறும் அகச்சான்றுகள்.

2. தொழுவூர் வேலாயுத முதலியார் பாடிய "திரு அருட்பா" வரலாறு.

3. அவர் பிரும்ம ஞான சங்கத்தாருக்கு 1882-ல் கொடுத்த வாக்கு மூலம்.

4. தென்னாற்காடு மாவட்ட கெஸட் 1906-ம் ஆண்டு.

5. பாலகிருஷ்ணப் பிள்ளை பதிப்பித்த அருட்பாவில் காணப்படும் சில குறிப்புக்கள்.

6. ஊரன் அடிகளார் பதிப்பித்த அடிகளார் வரலாறு ஆகியவைகளால் அவரது வரலாற்றை இன்னும் விரிவாகக் காணலாம். இதுகாறும் கூறியவை மிகவும் சுருக்கமானவை.

## 15. சன்மார்க்கம் என்பதன் பொருள்

1. சன்மார்க்கம் என்பது நல்வழி எனவும், நன்னெறி எனவும் பொருள்படும்.

2. சுத்த சன்மார்க்கம் என்பது தூய்மையான நல்ல வழி எனவும், சத்திய சன்மார்க்கம் என்பது உண்மையான நல்லவழி எனவும் பொருள்படும். இவையே இறைவனை அடையும் எளிய வழிகள் என்பது வள்ளலார் கருத்து.

3. "தங்கமே யனையார் கூடிய ஞான சமரச சுத்த சன்மார்க்கம்" என்பது பிள்ளைச்சிறு விண்ணப்பத்தில் ஒரு அடி. இது சன்மார்க்கத்தினருக்கும் மற்ற மார்க்கத்தினருக்கும் வேற்றுமையைக் காட்டுவதாகும். செம்பும் தங்கமும் ஒரே இனம். ஆனால் செம்பில் களிம்பு உண்டு; தங்கத்தில் களிம்பு இல்லை என்பதுதான் வேற்றுமை. செம்பிலே உள்ள களிம்பு நீங்கிவிட்டால் அது தங்கமாகி விடுகிறது. சன்மார்க்கிகள் மனஅழுக்கு நீங்கியவர்கள். ஆதலால் அவர்கள் "தங்கமே அனையார்" ஆகின்றனர் என்று தெரிய வருகிறது.

## 16. வள்ளலாரது கொள்கைகள்

இளமையில் முருகனைக் கடவுளாகவும், திருஞான சம்பந்தரைக் குருவாகவும், திருவாசகத்தை வழிபடும் நூலாகவும் கொண்டு, பின்னர் ஒற்றியூரில் சிவபக்தராகவும் தில்லையில் நடராஜ பக்தராகவும், முடிவில் அருட்பெருஞ் சோதி அடியாராகவும், விளங்கினார். ''கடவுள் ஒருவரே, அவர் அருட்பெருஞ் சோதியர்! சிறு தெய்வ வழிபாடு கூடாது! உயிர்ப்பலி கூடாது, புலால் உண்ணலாகாது, சாதி சமய வேறுபாடுகள் கூடாது, எவ்வுயிரும் தன்னுயிர் போல் எண்ணவேண்டும், ஏழைகளின் பசியைப் போக்க வேண்டும், எதிலும் பொதுநோக்கம் வேண்டும், இறந்தவர்களை எரிக்காமல் புதைக்கவேண்டும், ஜீவ காருண்ய ஒழுக்கமே பேரின்ப வீடு பெற உதவும்'' என்பன அவரது கொள்கைகள்.

## 17. சன்மார்க்கத்தினரின் வேண்டுகோள்

''எல்லாமுடைய அருட்பெருஞ் சோதி அற்புதக் கடவுளே! இது தொடங்கி எக்காலத்தும் எவ்விடத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கியத் தடைகளாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பனவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும், வருணம், ஆசிரமம் முதலிய உலக ஆசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்தில் பற்றாவண்ணம் அருள் செய்ய வேண்டும்.

''சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும் எவ்விடத்தும் எள்ளளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும். எல்லாமாகிய தனிப்பெருந் தலைமை அருட்பெருஞ் சோதி ஆண்டவரே! தேவரீர் திருவருட்பெருங் கருணைக்கு வந்தனம்! வந்தனம்'' என வேண்டிக்கொள்வது.

**18.** அவர் கண்ட நெறிகளில் ஒன்று "பெருநெறி"

1. இது ஒரு புது நெறி. நெறி பல வகை. அதில் பெருநெறி ஒரு தனிவகை. நெறி என்றாலே நன்னெறியைக் குறிக்கும். தீ நெறியைக் குறிக்காது. இதை "நெறி நின்றாடு நீடு வாழ்வார்" என்னும் திருக்குறளால் அறியலாம்.

நெறி என்றால் வழி. அதுவும் நல்வழியையே குறிக்கும். அவ்வழியைக் குறிக்காது. இதனை "வழியே ஏகுக! வழியே மீளுக" என்பதால் அறியலாம்.

தீ நெறியைக் குறிக்கும் போதெல்லாம் நமது முன்னோர்கள் 'நெறியல்லா நெறி' என்றே குறிப்பிட்டிருக்கிறார்கள். இது தமிழகச் சான்றோரின் பண்பு.

வள்ளலார் தமது அருட்பாவில் பல நெறிகளைப் பற்றிக் கூறியிருக்கிறார், அவற்றுள் பெருநெறி என்பதை அடிக்கடி பல்வேறு இடங்களில் கூறியிருப்பதைக் காணலாம்.

"பன்னெறிச் சமயங்கள், மதங்கள் எனுமோர் பவநெறி உலகில் பரவியது. இதனால் மக்கள் செந்நெறி அறிந்திலர். இறந்திறந்து உலகோர் செறியிருள் அடைந்தனர். ஆதலின் இனி நீ புன்னெறி தவிர்த்து, வான் புத்தமுது அளிக்கின்ற சுத்த சன்மார்க்கத் தன்னெறி செலுத்துக! என்ற என் அரசே" எனக் கூறியிருக்கின்றார். இதில் பல நெறிகள் வந்துள்ளன.

வடலூரில் சத்திய ஞானசபை எட்டுப்பட்டை அமைப்பில் கட்டப்பட்டிருக்கிறது. அதில் எட்டாவது பட்டையில் குருநெறிக்கே என்னைக் கூட்டிக்கொடுத்தது, கூறிய பெருநெறிக்கே சென்ற பேர்க்குக் கிடைப்பது, பேயுலகக் கருநெறிக்கே சென்றவர் காணற்கரியது, காட்டுகின்ற திருநெறிக்கே சென்றவர்க் கேற்றது, "உத்தர ஞான

சிதம்பரமே'' என்ற அருட்பா எழுதப் பெற்றிருக்கிறது. இதில் ஒரு பெருநெறி வருகிறது.

''சிறுநெறி செலுத்தாது தடுத்தெனையாண்டு பெருநெறி செலுத்தியோன்'' என இறைவனைக் குறிப்பிடுகிறார். இங்கும் ஒரு பெருநெறி.

மற்ற நெறிகளுக்குப் பொருள் தெரிகின்றன. பெருநெறி என்றால் என்ன? எனில், ''பெரிய நெறி'' எனக் கூறி விடலாம். 'பெருநெறி என்பது எது?' என்றால் என்ன கூறுவது?

அருட்பாவில் உள்ள தெய்வமணிமாலையில், ''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர் தம் உறவு வேண்டும்''—இது உறவு நெறி. ''உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்''—இது வஞ்ச நெறி. ''பெருமை பெறு நினதுபுகழ் பேச வேண்டும்'' -இது பக்திநெறி. ''பொய்மை பேசாதிருக்க வேண்டும்''-இது வாய்மை நெறி. பெருநெறி பிடித்தொழுக வேண்டும்''—இங்கும் ஒரு பெருநெறி. ''மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும்''—இது சமயநெறி. ''மருவு பெண்ணாசையை மறக்கவே வேண்டும்''—இது துறவுநெறி. ''உனை மறவாதிருக்க வேண்டும்''—இது யோக நெறி. ''மதிவேண்டும்''—இது அறிவுநெறி. ''நின் கருணைநிதி வேண்டும்''—இது கருணைநெறி. ''நோயற்ற வாழ்வு நான் வாழவேண்டும்''—இது சுகாதார நெறி. இவற்றுள் பெரு நெறி என்றால் எது? புரியவில்லை.

பெருநெறி என்பது நான்கு எழுத்துக்களில் உள்ள இரண்டு சொற்களைக் கொண்ட ஒரு சிறு சொற்றொடர், இதனை வள்ளலாருக்கு முன்பு உள்ள சான்றோர்கள் எவரும் கையாண்டதாகக் கேள்விப் படவில்லை. பழந்தமிழ்

இலக்கியங்களில் தேடியும் என் கண்களுக்குப் புலப்பட வில்லை.

வள்ளற் பெருமான், திருஞான சம்பந்தரை வழிபடு குருவாகக் கொண்டார் என அறிந்தேன். அவரிடம் கிடைக்குமா என ஆராய்கிறேன். சம்பந்தருக்கு வயது மூன்று. சீர்காழியில் குளத்தருகில் பாலுண்ட வாயோடு காட்சியளித்தார். தந்தை சிவபாத இருதயர் பிரம்பெடுத்து வந்து, 'யார் பால் கொடுத்தது?' என்று அதட்டிக் கேட்டார். அதற்குச் சம்பந்தர் "பெம்மான்" என்றார். எந்தப் பெம்மான்? பிரமாபுரம் மேவிய பெம்மான். எந்தப் பிரமாபுரம்? "பெருநெறிய பிரமாபுரம்" என்றார். இங்கு அகப்பட்டுக்கொண்டது பெருநெறி. அங்கே பூட்டியிருந்த பூட்டுக்கு இங்கு சாவி கிடைத்தது போன்றிருந்தது. அது மட்டுமல்ல, பெரு நெறிய பிரமாபுரம் மேவிய பெம்மான்" என்ற சொற்றொடர், இறைவனையும் அவன் கோயில் கொண்ட சீர்காழியையும், அந்தச் சீர்காழி நகரத்தி லுள்ள சான்றோர்களின் நெறியையும் விளக்கியது. அப் பொழுது தெய்வமணிமாலைக்குத் திரும்பி வந்து, அங்குள்ள பெரு நெறியைப் பார்த்தால் வெறும் பெருநெறி என்றில்லை, "பெருநெறி பிடித்து ஒழுக வேண்டும்" என்றிருப்பது புரிந்தது.

மற்ற நெறிகளெல்லாம் பிறர் கொடுக்க வேண்டும் என்பதாகவும், இந்தப் பெருநெறி மட்டும் பிறர் கொடுத்துப் பெறுவதல்ல; "தானே பிடித்து ஒழுக வேண்டிய ஒன்று" என்றும் விளங்கிற்று.

இதிலிருந்து பெருநெறி என்பது எல்லா நெறிகளிலும் உயர்ந்த நெறி என்பதும், அது சான்றோர்களால் கையாளப் பெற்ற—கையாளப்படுகின்ற நெறி என்பதும், அது அன்பு

நெறி, அருள்நெறி, கருணைநெறி ஆகிய மூன்று நெறிகளாலும் பின்னப்பட்ட ஒரு பெருநெறி எனவும் விளங்கிற்று.

அன்பு நெறி, அருள் நெறி, கருணைநெறி ஆகிய இம் மூன்றும் மனமிளகிய நிலையையே காட்டுவன. எனினும் அவை ஒன்றல்ல. "அன்பு" சிறியவர் பெரியவரிடத்தில் காட்டுவது. "அருள்" பெரியவர் சிறியவரிடத்தில் காட்டுவது. "கருணை" தன்னை ஒத்தவரிடத்திற் காட்டுவது எனலாம்.

இனி அன்பு மேல்நோக்கிச் செல்வது, அருள் கீழ் நோக்கி வருவது, கருணை சமவழியில் நடப்பது எனவும் கூறலாம். இவ்வுண்மைகளை, "அன்பைச் செலுத்தல்" என்பதனாலும், "அருளைப் பொழிதல்" என்பதனாலும், "கருணை காட்டுதல்" என்பதனாலும் நன்கறியலாம், இம் மூன்றையும் கண்டு கையாண்டு நமக்கும் நடத்திக் காட்டி மகிழ்ந்தவர் வள்ளலார்.

## (அ) அன்பு நெறி

1. இதைப் பத்தி நெறி எனவும் கூறுவர். இதற்கு வள்ளலார் இலக்கணம் கூறும்பொழுது, இறைவனை ஒரு "மலை" என்கிறார். அதைப் பார்த்து எவரும் பயந்து விட வேண்டியதில்லை. அம்மலை "அன்பு என்ற கைப்பிடிக்குள் அடங்கிவிடும்" என்கிறார். அடுத்து இறைவனைக் "கடல்" என்கிறார். அதைக் கண்டு எவரும் பீதி அடைய வேண்டியதில்லை. அக்கடல் "அன்பு என்ற குடத்துக்குள்" அடங்கி விடக்கூடியது என்கிறார். அடுத்து இறைவனை "இவ்வுலகம் முழுவதும் நிரம்பியுள்ள ஒரு பரம்பொருள்" என்கிறார். இதைக்கண்டு எவரும் கலக்கமடைய வேண்டியதில்லை. அப் பரம்பொருள் "அன்பு எனும் வலைக்குள்" அகப்பட்டு விடும் என்று கூறுகிறார். இதிலிருந்து வெளியைவிட,

மலையை விட கடலை விட அன்பு பெரியது என்று தெரிகிறது. இறுதியில் இறைவனே ''அன்பு உருவானவன்'' என்று ''அன்புருவாம் பரமசிவமே'' என முடிக்கிறார்.

2. இதனைத் திருமூலரும் ''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவமாவது யாரும் அறிகிலார், அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே' எனக் கூறியிருப்பதாலும் நன்கறியலாம்.

3. இனி மக்களாய்ப் பிறந்தவர்கள் இறைவனிடத்தில் அன்பு செலுத்தியாக வேண்டும் என்பதற்காக, இறைவன் எத்தகையவன் என்பதை நமக்குச் சுட்டிக் காட்டுகிறார். ''கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பு'' என்பது அவரது வாக்கு. இறைவன் கற்றவர்க்கு மட்டுமல்ல, சிறிதும் கல்லாதவர்க்கும் மகிழ்ச்சியைத் தருபவன், ஏன்? அவன் மகிழ்ச்சியே உருவானவன் என்கிறார்.

4 அடுத்து 'காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண் என்பது அவரது வாக்கு. கண் உள்ளவர்களுக்கு மட்டுமல்ல, கண் இல்லாதவர்களுக்கும் கண் அளிப்பவன் இறைவன், காரணம் எல்லா உயிர்களுக்கும் இறைவன் கண்ணாகவே இருப்பவன் என்பது அவர் கருத்து. இதில் ஒன்று கண் இல்லாதவர்களுக்கு கண்கொடுப்பது புரிகிறது. கண் உள்ளவர்களுக்கும் அவன் கண்கொடுப்பது என்றால் அது எப்படி? அது ஆராய வேண்டிய ஒன்று. ஆராய்ந்தால், அது ஊனக் கண்ணினும் உயர்ந்த ஞானக் கண் என்பது புலப்படும்.

### (ஆ) அருள் நெறி

1. வள்ளலார் ''வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்'' என்கிறார். இதனால் உயிர்கள் வாடுவது மட்டுமல்ல, பயிர்கள் வாடியதைக் கண்டும் அவர்

வாடியிருக்கிறார் என்று தெரிகிறது. இது அருள் நெறியில் மிக உயர்ந்த நெறி. இதில் "கண்ட போதெல்லாம்" என்ற ஒரு சொற்றொடர் இருக்கிறது. இது வள்ளலார் ஒரு பயிரை வாடியிருக்கும் போது கண்டிருக்கிறார்; கண்டு வருந்தியிருக்கிறார்; மறுபடியும் உழவன் தண்ணீர் இறைத்து அப் பயிர் செழித்து நிற்பதைக் கண்டு மகிழ்ந்திருக்கிறார்; அடுத்து ஒரு நாள் அதே பயிர் வாடியிருப்பதைக் கண்டு வருந்தியிருக்கிறார் என்ற நிகழ்ச்சிகளையெல்லாம், "கண்ட போதெல்லாம்" என்ற சொற்றொடர் அறிவிக்கிறது.

2. வள்ளலார் உடம்பு ஒரு முறை இளைத்திருந்தது. அன்பர்கள் காரணம் கேட்டபோது, 'நான் வருகின்ற வழியில் நடந்து சென்ற மக்களில் பலபேர் இளைத்திருந்ததைக் கண்டேன், அதனால் என் உடம்பு இளைத்து விட்டது போலும்' என்றார். இது எவ்வளவு பெரிய அருள் நெறி!

3. மற்றொரு தடவை வள்ளலாருடைய புருவம் துடித்தது. இதைக் கண்டதும், "யாருக்கோ எவருக்கோ துன்பம் வரப் போகிறது, அதைக் கண்டு நான் துடிக்கப் போகிறேன் என்பதை இது அடிதுடித்துக் காட்டுகிறது" என்று கூறியிருக்கிறார். இந்த உயர்ந்த அருள்நெறியை நம்மால் சிந்தித்துக் கூடப் பார்க்க முடியவில்லை. அவ்வளவு உயர்ந்து நிற்கிறது இந்த அருள் நெறி.

4. வள்ளலார் ஒரு ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். சொத்து ஒன்றும் இல்லாதவர். வருமானமும் இல்லாதவர். இவரின் இந்த நிலைகண்டு தமையன் கடிந்ததால் குடும்பத்தின் ஆதரவையும் இழந்தார். தமையனார் இவருக்கு வீட்டில் சோறு போடக்கூடாது என்று கட்டளை இட்டி

ருந்ததால், பசிக்கு உணவு கிடைக்காமல் வருந்தியவர். எவரிடத்திலும் சென்று இரந்ததில்லை. எதுவும் ஏற்ற தில்லை. அவர் வாழ்க்கையில் பலகாலும் பசித்திருந்து "பசி" மக்களை எப்படி வருத்தும் என்பதை அவர் உணர்ந்திருக் கிறார். அதன் விளைவே, "சத்திய தருமச் சாலையை"த் தோற்றியதும், மக்களின் பசிப் பிணியைப் போக்கும் செயற் கருஞ்செயலைச் செய்திருப்பதும் என உணரலாம்.

(இ) கருணை நெறி

1. உலகில் உள்ள எல்லா நாட்டினரிடத்தும், எல்லா மதத்தினரிடத்தும், எல்லா மொழியினரிடத்தும் மட்டு மல்ல, எல்லா உயிர்களிடத்தும் காட்டுவதே "கருணை நெறி" ஆகும். இதற்கு "உயிரிரக்கம்" என்று பெயர். இதை ஜீவகாருண்யம் என்பர். வள்ளலார் கூறியிருக்கிற கருணை நெறியிலும், ஒருமைப்பாட்டிலும் மக்கள் மட்டு மல்ல, மற்ற எல்லா உயிர்களும் அடங்கியிருக்கின்றன.

2. "ஊனைத் தின்று ஊனைப் பெருக்காமை முன்னி னிதே" என்று இனியவை நாற்பது கூறுகிறது. "தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிதுஊன் உண்ணற்க" என்பது வள்ளுவர் கருத்து. இதற்குமேல் வள்ளற்பெருமான், மக்க ளாய்ப் பிறந்தவர்கள் எல்லா உயிர்களிடத்தும் கருணை காட்டி ஆகவேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறார்.

3. நான் 50 ஆண்டுகட்கு முன் மூன்று சொற்றொடர் களை எழுதியிருந்தேன். "தன்னைத் தானே காப்பாற் றிக் கொள்ளத் தெரியாத மனிதர்கள், தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத உருவங்களுக்கு, தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத உயிர்

களைப் பலிகொடுக்கிறார்கள்'' என்பது. பொருள் விளங்கியிருக்கும் என நம்புகிறேன்.

தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரிந்த மனிதர்களாக இருந்தால், தங்களுக்கு வந்திருக்கும் நோய் என்ன? அது எப்படி வந்தது? அதை எப்படிப் போக்குவது? என்ன மருந்து சாப்பிடுவது? என்று தெரிந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்வார்கள். அப்படிக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியாமையால்தான், சில உருவங்கள் தங்களைக் காப்பாற்றும் என நினைத்து அதனிடம் போகிறார்கள்.

அந்த உருவங்களும் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாதவை. காப்பாற்றிக் கொள்ளத் தெரிந்தால் அவைகள் நேராக ஆட்டு மந்தைகளுக்கும் கோழிப் பண்ணைகளுக்கும் சென்று பசியாறக் கடித்துத் தின்று திரும்பி வரும். அதனால் எப்படி வெளியே போக முடியும்? பூசாரிதான் உள்ளே வைத்துப் பூட்டி விடுகிறானே! எவனாவது ஏமாந்தவன் எதையாகிலும் கொண்டு வந்து 'பலி' கொடுக்க மாட்டானா என்று, அவை உட்கார்ந்திருந்த இடத்திலேயே ஏங்கிக் கொண்டிருக்கும். அதனால் அது தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள முடியாது.

இனி பலி கொடுக்கப்படும் உயிர்கள். அவைகளும் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ள முடியாதவை. மனிதன் அவைகளை வெட்டும் போதும் அறுக்கும்போதும் ''கீச்கீச்'' சென்று அலறி அழுது மடிவதைத் தவிர, அவைகளால் வேறொன்றும் செய்ய இயலாது.

கரடி, புலி, சிறுத்தை, சிங்கம் முதலியன தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரிந்தவை. அவைகளைக்

கொண்டு வந்து எவரும் பலி கொடுப்பதில்லை. ஆகவே தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத மனிதர்கள், தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத உருவங்களுக்கு, தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத உயிர்களைப் பலி கொடுக்கிறார்கள் என்பது முடிவு.

ஜீவ காருண்யப் பிரச்சாரம் செய்யும் அன்பர்கள், இனி ஒரு புதியமுறையைப் பின்பற்றுவது நல்லது. அவர்கள் இனி உயிர்ப்பலி கூடாது என்று சொல்வதை நிறுத்திக்கொண்டு, காளி கோயிலுக்கும், கருப்பண்ணன் கோயிலுக்கும் சென்று, ''அம்மையே! ஐயனே! இனி உன் கோயிலுக்கு வருகின்ற பக்தர்களிடம் 'ஆடு, கோழிகளை இனிப் பலி கொடுக்க வேண்டாம். அவற்றைத் தின்று சலித்து விட்டது. இனி கரடி, புலி, சிறுத்தை, சிங்கங்களைக் கொண்டு வந்து பலி கொடுங்கள்' எனக் கட்டளையிட வேண்டும்'' என்று அத்தெய்வங்களிடம் வேண்டிக்கொள்ள வேண்டும். இப் பக்தர்கள் அவைகளைக் கொண்டுவரக் காடுகளுக்குச் செல் வார்கள். சென்றதும், அவர்களே அவ்விலங்குகளுக்குப் பலி யாகிவிடுவார்கள். கோவில்களில் நடைபெறும் பலிகள் தானாகவே நின்றுவிடும். ஜீவகாருண்யப் பிரச்சாரமும் வெற்றிபெற்று விடும்.

வள்ளலார் ''உயிர்க்கொலையும், புலைப் புசிப்பும் உடையவர்களெல்லாம் உறவினத்தார் அல்லர், பிறவினத் தார்'' என்று, தமது அருட்பாவில் கூறியிருக்கிறார். இதற் குப் பொருள கூறியவர்களுள் சிலர், 'உறவினம் பிறவினம்' என்பதை மனித இனம் அல்லாத பிறஇனம் என்று சிலரும், செட்டியார் முதலியார் முதலிய சைவ இனத்தவரல்ல, வேறு இனத்தைச் சேர்ந்தவர் என்று சிலரும் பொருள் கூறுகின்றனர்.

வள்ளலார் கருத்து அதுவல்ல. அவர் உயிரினங்களை யெல்லாம் இரண்டாகப் பிரிக்கிறார். ஒன்று தட்டைப்பல் இனம், மற்றொன்று கோரைப்பல் இனம். தட்டைப்பல் இனங்கள் யானை, ஒட்டகம், குதிரை, மாடு, கழுதை, மான் ஆடு முதலியன. இவை "உயிர்க்கொலையும் புலைப் புசிப்பும்" உடையன அல்ல. கோரைப்பல் இனங்கள் சிங்கம், சிறுத்தை, புலி, கரடி ஓநாய், நரி, நாய் முதலியன. இவை கள் அனைத்தும் கோரைப் பற்களாகிய கொக்கிப் பற்களை உடையன. இவை அனைத்தும் "உயிர்க் கொலையும் புலைப் புசிப்பும்" உடையன. இவைகளால் புல் உணவை உண்ண முடியாது. உண்ண விரும்பினாலும், அவற்றின் பற்கள் அவைகளுக்குத் துணை செய்யா.

"மக்களாய்ப் பிறந்தவர்களுள்" உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையவர்களானால், அவர்கள் மனித இனத்தைச் சேர்ந்தவர்களல்ல, கோரைப் பற்களையுடைய விலங்கினத்தைச் சேர்ந்தவர்கள் என்பது வள்ளலாரின் கருத்து. இதிலிருந்து உறவினம், பிற இனம் என்பதற்கு, தட்டைப்பல் இனம், கோரைப்பல் இனம் எனப் பொருள் கூறுவதே சிறந்தது எனத் தெரிகிறது.

கழுதையானது தட்டைப்பல் உடைய மக்கள் இனத் தைச் சேர்ந்தது. அதற்கு எவ்வளவு பசித்தாலும், எதை எதையோ தின்றாலும், இறைச்சியைத் தின்னாது. அதுவே உண்ணாத பொருளை மனிதர் உண்ணலாமா? என்பது சிந்திக்க வேண்டிய ஒன்று. சிந்தித்தால் மனிதரது பற்களின் இயற்கை அமைப்பே இறைச்சியைத் தின்பதற்கல்ல என அறியலாம்.

5. ஒரு மாணாக்கன் தவம் செய்ய விரும்பி அதற்குரிய வழிகளை அறிய தவமுனிவர் ஒருவரிடம் சென்றான். அவர் இப் பையனுடைய இளம் வயதை எண்ணி, தவம் செய்

வதற்குரிய பக்குவம் இல்லை என்பதை உணர்ந்து, அவனுக்கு உரிய வழியைக் காட்டவேண்டும் என உணர்ந்து, "தம்பீ! உன்னால் ஒரு பெருந்தவத்தைச் செய்ய முடியுமா?" என்று கேட்டார். அவன் என்னால் முடியும் என வாக்களித்தான். அதன்பிறகு அவனுக்குரிய பெருந்தவத்தை இவ்வாறு கூறினார்: "அனைத்துயிரும் ஒன்றென்று எண்ணு. அரும் பசி எவருக்கும் ஆற்று. மனத்துள்ளே பேதா பேதம், வஞ்சம், பொய், களவு, சூது, சினம் இவற்றையும் தவிர்ப்பாயாகில் செய்தவம் வேறொன்றுண்டோ?" இதுவே "பெருந்தவம்" எனப் போதித்தார்.

இத்தவத்தில் மூன்று நெறிகள் உள்ளன. ஒன்று அனைத்துயிர்களும் ஒன்று என்று எண்ணுவது; மற்றொன்று அரும்பசி எவருக்கும் ஆற்றுவது; இன்னொன்று மனத்தைத் தூய்மைப் படுத்துவது. இம் மூன்றுமே "கருணை நெறி"களாகும்.

6. வட நாட்டிலிருந்து ஜைன சமயத் தலைவர் "அனுவிரதி ஆச்சார்யா துளசி" அவர்கள் தென்னாட்டிற்கு வந்த போது, என் இல்லத்திற்கும் வந்திருந்தார். என் நூல் நிலையத்தையும் பார்த்தார். அதில் இராமலிங்க அடிகளின் அருட்பாவை எடுத்து, அதிலுள்ள சில பாடல்களைப் படித்துக் காட்டினேன். "வாடிய பயிரைக் கண்டு அவர் வாடியதையும் இளைத்தவர் தமைக் கண்டு இளைத்ததையும், பிறர் துயர் கண்டு துடித்ததையும்" அறிந்து, அவர் துடிதுடித்துப் போனார். அதோடு "தென்னாட்டில் இத்தகைய ஜீவகாருண்யம் படைத்த சான்றோர்கள் இருந்தனரா?" என்று வியந்தும் கேட்டார். மேலும் சில கருத்துக்களை அவருக்கு விளக்கிக் காட்டிய போது, அவர் சொன்ன சொற்கள் இவை: "நான் வட நாட்டில் இருந்து தென்னாட்டிற்கு வந்து மக்களுக்குக்

கருணை நெறியைப் பரப்பலாம் என வந்தேன். இப்போது இன்னும் இங்கு உள்ள கருணை நெறிகளை அறிந்து, அவைகளைக் கொண்டுபோய் வடநாட்டில் பரப்பவேண்டும் என எண்ணுகிறேன்'' என்பதே.

7. வள்ளலாருடைய கருணை நெறிகளில் ஒன்று ''எல்லா மக்களும் தங்கள் மனதைத் தூய்மைப்படுத்திக் கொண்டு, பேராசைகளையும் பேதங்களையும் ஒழித்து'' சன்மார்க்க நெறிநின்று இறைவனை அடைய வேண்டும் என்பது.

அதற்காக வள்ளலார் பேதை மக்களைப் பார்த்து வருந்தி, அவர்கள் நிலையைத் தன்மேல் ஏற்றித், தானே பேதையானேன், அதுவும் வெறும்பேதையல்ல, ''பேயேறி நலிகின்ற பேதையானேன்'' என்கிறார். அப்படி ஆனது எதனால் என்பதற்குக் காரணமும் கூறுகின்றார், ''பித்தேறி அலைகின்ற மனத்தினாலே பேயேறி நலிகின்ற பேதை யானேன்'' என்று. எந்தெந்தப் பித்துகள் மனத்திலே ஏறின என்பதை விளக்கியும் காட்டுகிறார். வஞ்சக வாழ்க்கை ஏறி, மயக்கம் ஏறி, பேராசை ஏறி, மதநெறி ஏறி, அதனாலே பித்து ஏறியது என்று.

அந்தப் பித்து எப்படி மனதை அலைக்கழிக்கிறது என்பதற்கு ஒரு உவமை காட்டுவதுதான் நமக்குப் பெரும் வியப்பைத் தருகிறது. நாம் ஏறுகிற பொருட்கள் எனச் சில உள்ளன. அவை கப்பல், மாடிப்படி முதலியன; அவை நம் மேல் ஏறுவதில்லை.

நம்மேல் ஏறுகின்ற சில பொருட்கள் உள்ளன. அவை ஆடை, அணிகலன்கள். அவற்றின் மேல் நாம் ஏறுவதில்லை. ஆனால் இரு பொருட்கள் ஒன்றின்மேல் ஒன்று ஏறுகின்றன. அவை, மத்தும் தயிரும்.

மத்தின் மேல் தயிர் ஏறி, தயிரின் மேல் மத்து ஏறி ''சர்—சர்'' என்று அலைக்கழிப்பதுபோல இந்தப் பித்து என மனத்தின் மேல் ஏறி, மனம் அதன்மேல் ஏறி நான் அலைக்கழிக்கப் படுகிறேன் என வருந்துகிறார். இது அவர் நிலையை அல்ல, நம்நிலையை எண்ணியே கூறியிருப்பதாகும். பாடலும் இது தான்:

மத்தேறி அலை தயிர் போல் வஞ்ச வாழ்க்கை
மயலேறி விருப்பேறி மதத்தினோடு
பித்தேறி அலைகின்ற மனத்தினாலே
பேயேறி நலிகின்ற பேதையானேன்

என்பது.

## முடிவுரை

ஆக மூன்று புரிகளைக் கொண்டு முறுக்கப்பெற்ற ஒரு வடக்கயிறு போன்றதுதான் அன்பு நெறி, அருள் நெறி, கருணை நெறி ஆகிய மூன்று நெறிகளையும் பின்னிக் கொண்டிருக்கின்ற ஒரு நெறி. அதுவே பெரு நெறி எனக் கொள்ள வேண்டியிருக்கிறது.

மற்றொரு வகையில் நெறி என்றால் வழி. பெரு நெறி என்றால் உயர்ந்தவழி, நல்ல வழி என்றாகும். இதனுடைய நேரான மொழி பெயர்ப்பே சன்மார்க்கம் (மார்க்கம்-வழி). இதைக்கண்ட பெருமகன் வள்ளலார்.

இதுகாறும் கூறியவற்றால் வள்ளலாரது வரலாற்றை யும், அவர் கண்ட நெறியையும் ஒருவாறு அறியலாம். நாளைய தினம் அவருடைய ''அருட்பா''வைப் பற்றி ஆராய்வோம்.

# திரு அருட்பா

## 1. அருட்பாவின் சிறப்பு

தமிழகத்தில் நான்கு நூல்களுக்குத் தனித்தனியான சிறப்புகள் உள்ளன. முதல் சிறப்பு பகவத் கீதைக்கு; அது மனிதன் கேட்க கடவுள் சொன்னது என்பதால். இரண்டாவது சிறப்பு திருவாசகத்திற்கு; இது கடவுள் கேட்க மனிதன் சொன்னது என்பதால், மூன்றாவது சிறப்பு திருக்குறளுக்கு; அது மனிதன் கேட்க மனிதன் சொன்னது என்பதால். நான்காவது சிறப்பு அருட்பாவிற்கு. இது மனிதரிலும் அருளாளர்கள் கேட்க அருளாளன் கூறியது என்பதால். இச்சிறப்பு அருட்பாவிற்குப் பெருஞ் சிறப்பைத் தருவதாகும்.

## 2. பெயர்ச் சிறப்பு

தமிழ்நூல்களில் ஐந்து நூல்கள் தன் பெயரையே தமக்குச் சிறப்பாகப் பெற்றுத் திகழ்கின்றன.

1. மந்திரங்கள் பல. திரு சேர்ந்த மந்திரம் ஒன்றே ஒன்று; அது, திருமந்திரம்.

2. வாசகங்கள் பல. நானும் நீங்களும் பேசுவதெல்லாம் வாசகம் தான். ஆனால் திரு சேர்ந்த வாசகம் ஒன்றே ஒன்று. அது திருவாசகம்.

3. கோவை பல. தஞ்சை வாணன் கோவை, திரு வெங்கைக் கோவை, திருவாரூர்க் கோவை என்பவை. ஆனால், திருசேர்ந்த கோவை ஒன்றே ஒன்று; அது திருக் கோவை.

4. குறள்களும் பல. அவை ஔவைக் குறள் முதலியன. ஆனால் திரு சேர்ந்த குறள் ஒன்றே ஒன்று; அது திருக்குறள்.

5. அருட்பாக்களும் பல. அருளாளர்கள் பாடிய பாக்கள் அனைத்தும் அருட்பாக்களே. ஆனால் திரு சேர்ந்த அருட்பா ஒன்றே ஒன்று; அது திருவருட்பா.

## 3. திரு அருட்பா

ஆறு திருமுறைகள், அதாவது ஆறு பகுதிகள், 399 பதிகங்கள், 5818 பாடல்கள்.

இதில் அருட்சோதி அகவல் ஒரு மலை போன்றது. அதன் ஒவ்வொரு அடியும் அதன் படிகளைப் போன்றவை.

இவையே அருட்பாவின் அமைப்பு, இறைவனை முன்னிறுத்தி 5818 பாடல்களைப் பாடிய ஒரே புலவன், ஒரே துறவி, ஒரே ஞானி, வள்ளலார்.

## 4. இறைவனைக் கண்டது

உலகில் உள்ள அறிஞர்களும் ஞானிகளும் இறைவனைத் தேடித் தேடி அலைகிறார்கள். ஆனால் வள்ளலார் உள்ளம் ஒன்றுதான் இறைவனது இருப்பிடத்தைத் தேடி, அது மனிதரது உள்ளம் என்று கண்டு ஆனந்தக் கூத்தாடியது.

இக்கருத்தை அருட்பாவில் உள்ள ஒரு பாடல் மிக அருமையாக முழங்கிக் கொண்டிருக்கிறது. அது,

எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்போல்
எண்ணி, உள்ளே ஒத்துரிமை உடையவராய் உவக்
கின்றார் யாவர்,
அவருளந்தான் சுத்த சித்துருவாய் எம்பெருமான்
நடம் புரியும் இடம் எனத் தேர்ந்தேன்

என்ற அருட்பா.

இப் பாடலில் எத்துணையும் என்ற சொல்லுக்கு இரு பொருள்கள் உள்ளன. ஒன்று எந்த அளவும் என்பது; மற்றொன்று எள் அளவும் என்பது.

அப்படி எள் அளவும் பேதமுறாமல், வேற்றுமையுறாமல் எல்லா உயிர்களையும் தம் உயிரைப் போலக் கருதுகின்ற மக்கள் உள்ளந்தான் இறைவன் குடிகொள்ளும் இடம் என்று இந்த அருட்பா முடிவுகட்டிக் கூறுகிறது.

இக் கருத்தைத் தெளிவாக அனுபவ மாலையில் உள்ள நூறு பாடல்கள் விளக்கிக் கொண்டிருக்கின்றன. அதில், தானும் இறைவனும் கலந்த நிலையை ஒரு பா கூறுகிறது. அது,

அறியாத பருவத்தே எனை வலிந்து அழைத்தே
ஆடல் செய்யும் திருவடிக்கே பாடல் செயப் பணித்தார்
செறியாத மனச் சிறியேன் செய்த பிழையெல்லாம்
திருவிளையாட் டெனக்கொண்டே திருமாலை யணிந்தார்
பிரியாம லென்னுயிரில் கலந்து கலந்து இனிக்கும்
பெருந் தலைவர் நடராஜர் என்பது.

## 5. ஆட்சி

நாடுகளை ஆட்சி புரிகிறவர்கள் இறைப்பற்று உள்ள நன்மக்களாக இருக்க வேண்டும் என்பது, வள்ளலார் முடிவு. அப்படிப்பட்ட ஆட்சி உலகமெல்லாம் நிலவ வேண்டும் என்று வள்ளலார் பெரிதும் விரும்பி வாழ்த்து கிறார். அது மட்டுமல்ல, அது இல்லாத ஆட்சிகள் அனைத்

தும் ஒழிய வேண்டும் என்றும் கருதுகிறார். இக் கருத்தினை அருட்பாவின் 5618-வது பாடல் அடியிற் கண்டவாறு கூறுகிறது.

கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக
அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க—தெருள்நயந்த
நல்லோர் நினைத்த நலம் பெறுகநன்று நினைந்து
எல்லோரும் வாழ்க இசைந்து

## 6. வணங்குதல்

பிறரைக் கண்டால் உடனே வணங்க வேண்டும், அதுவும் அவர்கள் வணங்கும் முன்னே நாம் வணங்க வேண்டும் என்று வள்ளலார் கருதுகிறார். இக் கருத்தையே நபிகள் நாயகம் அவர்களும் சலாம் செய்வதில் முந்திக்கொள் என்று கூறியிருக்கிறார்.

மற்றவர்கள் கைகூப்பிய பின்னருங்கூட மரியாதைக் காகக் கூப்பாத கைகளை வள்ளலார் 'கொடுங்கைகள்' என்று சாடுகிறார். இக்கருத்தை "அடுத்தவர் கரங்கள் கூப்பினும் கூப்பாக் கொடுங்கை" என 3344-வது பாடல் கூறுகிறது.

## 7. வட்டி

3351-வது பாடல் சமுதாயத்திலுள்ள மக்களின் போக்கைச் சாடுகிறது. வட்டியைப் பெருக்கி ஏழைகளின் மனைகளைக் கவர்வதும் ஓட்டைச் சட்டியைப் பிறர் வைத் திருந்தாலும் அதைக் கண்டு பொறாமை கொள்வதும், சூதுகள் நிறைந்த மனதைப் பெறுவதும், நல்லவர்கள் பெரியவர்கள் மனம் வெறுக்கும்படி நடப்பதும் தவறு என்று கண்டிக்கிறார். அதைப் பிறர் செய்வதாக இல்லா மல் தன் மேல் ஏற்றி, அப்படிப்பட்ட என்னை, இறைவா

*நீ காத்தருள் என்று இறைவனை வேண்டுகிறார். அப் பாடல்,*

வட்டியே பெருக்கிக் கொட்டியே ஏழை
மனை கவர் கருத்தினேன் ஓட்டைச்
சட்டியே எனினும் பிறர் கொளத் தரியேன்
தயவிலேன் சூதெலாம் அடைந்த
பெட்டியே நிகர்த்த மனத்தினேன்
—உலகில்
பெரியவர் மனம் வெறுக்கச் செய்
எட்டியே மண்ணாங் கட்டியே யனையேன்
என்னினும் காத்தருள் எனையே

## 8. திறந்த உள்ளம்

*அடுத்து ஒரு பாடல் 'இறக்கவும் ஆசையில்லை, இப்படி நான் இருக்கவும் ஆசையில்லை, இனி நான் பிறக்கவும் ஆசையில்லை, பெரியவர் பெரியவர் என்று சிறக்கவும் ஆசையில்லை, விசித்திரங்கள் செய்யவும் ஆசையில்லை, துறக்கவும் ஆசையில்லை, துயரடைந்து தூங்கவும் ஆசை ஒன்றிலை'' என்று, வள்ளலார் பிள்ளைச் சிறு விண்ணப்பத் தில், தன் உள்ளத்தைத் திறந்து காட்டுவது, தம் உள்ளத்தை யெல்லாம் சுடுகிறது.*

## 9. மரணமிலாப் பெருவாழ்வு

*அருட்பாவில் மிக உயர்ந்து நிற்கின்ற பாடல் ஒன்று, அது.*

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே நிறைந்து நிறைந்து
ஊற்றெழுங் கண்ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே நன்னிதியே ஞான

நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம் வம்மின்
உலகியலீர்! மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாம் கண்டீர், புனைந்துரையேன்
பொய்புகலேன், சத்தியம் சொல்கின்றேன்

என்பது.

இப்பாடல் மூலம் வள்ளலார் தாம் பெற்ற பெரும் பேற்றைப் பெற உலக மக்களையெல்லாம் அழைக்கின்ற அந்தப் பேரன்பு, நம்மையும் நினைக்கச் செய்து, உணரச் செய்து, நம் உள்ளத்தையும் நெகிழச் செய்கிறது.

## 10. பட்ட பாடு

திருவருள் முறையீடு என்ற பகுதியில்,

நான் படும் பாடு சிவனே உலகில் நவிலும்
பஞ்சுதான் படுமோ சொல்லத்தான் படுமோ
எண்ணத்தான் படுமோ?

என்ற பாடலும்

"பட முடியாதினித் துயரம், பட்டதெல்லாம் போதும்"

என்று இறைவனிடம் முறையிடும் பாடலும், அவர் இவ் வுலகில் பட்ட பாடுகளையெல்லாம் நமக்குக் காட்டிக் கொண்டிருக்கின்றன.

## 11. உடலை எரித்தல்

உயிர் பிரிந்த பிறகு உடலை எரிப்பதை மனம் வருந்திக் கண்டிக்கிறார். அதைப் பின்வரும் பாடலால் அறிய முடிகிறது.

அணங்கெழுபேர் ஓசையொடும் பறையோசை
பொங்கக் கோரணி கொண்டந்தோ
பிணங்கழுவி எடுத்துப் போய்ச் சுடுகின்றீர்
இனிச் சாகும் பிணங்களே நீர்.

கணாங் கழுகுண்டாலும் ஒரு பயனுண்டே,
என்ன பயன் கண்டீர் சுட்டீர்!
எணங்கெழு சாம்பலைக் கண்டீர்—அது
புன்செய் எருவுக்கும் இயலாதன்றே!

## 12. மூன்று தேவைகள்

வள்ளலார் இறைவனிடத்தில் மூன்று தேவைகளைக் கேட்கிறார். அவை ; புண்படா உடம்பும், புரைபடா மனமும், பொய்படா ஒழுக்கமும் என்று வேண்டுகிறார். அந்த வேண்டுதலும், இவைகளைப் பெற்று இரவும் பகலும் கண்படாது நின்தனையே கருத்தில் வைத்து ஏத்துதற்கு என்று வேண்டுகிறார். இது அவருக்கல்ல, நமக்கு. உடம்பு புண்படாது, மனம் புரை படாது, ஒழுக்கம் பொய்படாது இருக்க வேண்டும் என்பது கருத்து. இப் பேற்றை நாமும் பெற வேண்டும் என்று அருட்பா வற்புறுத்துகிறது.

## 13. இறைவனை இப்பொழுதே அடையலாம்

ஆம்; உடனே அடையலாம் என்று அருட்பா கூறுகிறது. இதை இது தருணம், அப்பன் வரு தருணம், அத்தன் வரு தருணம், கணவர் வரு தருணம், கைகலந்த தருணம், தழுவி நின்ற தருணம், மணவாளர் வருகின்ற தருணம், அருள் புரிந்த தருணம், அருளாளர் வருகின்ற தருணம், பதி வரும் ஓர் தருணமிது தருணமிது தோழி.

சன்மார்க்கம் தலையெடுக்கப் புரிகுவது இத்தருணம்
களக்கமறப் பொதுநடம் நான் கண்டுகொண்ட தருணம்
பொற்சபையில் சிற்சபையில் புகுகின்ற தருணம்

என்று பல இடங்களில் அருட்பா இறைவனை விரைவில் அடையும் தருணத்தை வற்புறுத்திக் கொண்டிருக்கிறது. அது மட்டுமல்ல, 3757, 4720, 4784 வது பாடல்கள்.

'கருண நிதியே!' என்றும், 'கருணைத்திற்கு ஏற்றவா' என்றும் அழைத்து, நினையடையும் கருணை இஞ்ஞான்றே என்றும் வற்புறுத்துகிறது.

அருட்பாவில் உள்ள 5818 பாடல்களில், ஒவ்வொரு பாடலைப் பற்றியும், ஒவ்வொரு அடியைப் பற்றியும், ஏன் ஒவ்வொரு சொற்றொடரைப் பற்றியும் கூட ஒவ்வொரு நாள் பேசலாம். அவ்வளவு ஆழமானவை அவருடைய பாடல்கள்.

இனி "அருட்பாவில் ஒரு அடி" பற்றிச் சில :

இக் காலத்தில் சிலர் வள்ளலார்மீது தவறான கருத்துக்களைப் பரப்பி வருகின்றனர். அதுவும் அவர் புராணங்களை வெறுப்பவர் எனவும், சமயங்களை மறுப்பவர் எனவும், நாத்திகர் எனவும் தூற்றுவதாகும். இது வேண்டுமென்றே சிலர் செய்யும் தவறுகள். இது சாதிபேதங்களை அவர் ஒழிப்பதாலும், மூடப் பழக்க வழக்கங்களை அவர் வெறுப்பதாலும், சிலர் மனம் பொறாது, இத் தவறான கூற்றுக்களைப் பரப்பி வருகின்றனர். இக் கூற்றுக்கள் அனைத்தும் உண்மையல்ல. அவர் சிறந்த ஆத்திகர், ஒரு நல்ல பாரம்பரிய மரபைத் தழுவியவர் என்பதை மெய்ப்பிக்க அடியிற் கண்டவைகளை உங்கள் முன் வைக்கிறேன்.

**1. அகச் சான்று**

இது அருட்பாவின் ஒரு பாவில் உள்ள ஒரு அடியில் உள்ள ஒரு சொற்றொடர். அது "வாழையடி வாழை"—

**வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட**
**மரபினில் யான் ஒருவன் அன்றோ?**

என்பது.

இறைவனையே நோக்கி "இறைவா நான் உன் அடியார் பரம்பரையில் தோன்றியவன் அல்லவா?" என்று உரிமைக் குரல் எழுப்புகின்ற அவரது வாக்கு இது.

## 2. வாழையடி வாழையென வந்த மரபு

இச் சொற்றொடரில் மரபு என்ற ஒரு சொல் இருக்கிறது. அந்த மரபு எது என்று ஆராய வேண்டும். இறுதிக் காலத்தில் தோன்றிய ஞானிகள் மூவர். அவர்கள் பட்டினத்தார், தாயுமானவர், இராமலிங்க அடிகள். இம் மூவரும் துறவி, ஞானி, புலவர் என்றாவர்.

இம் முறையில் பார்த்தால் இராமலிங்க அடிகளுக்கு முந்திய மரபு தாயுமானவர் என்று தெரிகிறது. தாயுமானவருக்கு முந்திய மரபு எது? தாயுமானவர் வாக்கிலிருந்தே இதைக் கண்டு பிடிக்க வேண்டும் அல்லவா? அவருடைய குரு மௌனகுரு. திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டையிலுள்ள மௌன மடத்தில் வாழ்ந்தவர். தாயுமானவர் அவருக்கு வணக்கம் செலுத்தும்பொழுது, "மந்திர குருவே யோக தந்திர குருவே, மூலர் மரபில் வரு மௌனகுருவே" என்று வணக்கம் செலுத்தியிருக்கிறார். இதிலிருந்து இந்த மரபுக்கு மூலம் மூலர்; அவர் திருமூலர் என்று தெரிகிறது. ஆக, இப்பொழுது நமக்கு ஒரு மரபு கிடைத்து விட்டது. முதலில் திருமூலர், பிறகு சித்தர்கள், அடுத்து தொல்காப்பியர், திருவள்ளுவர், பிறகு சமயசாரியர்கள், சந்தானாசாரியர், நாயன்மார், பட்டினத்தார், தாயுமானவர், இராமலிங்க அடிகள் எனக் கொள்ள வேண்டியிருக்கிறது.

இத்தனை பேரும் திருமூலர் மரபையே சார்ந்திருக்கிறார்கள். அந்த மரபைவிட்டு மாறவில்லை என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகள்;

திரு மூலர்

(அ) திருமந்திரத்தில் முதல் தந்திரம் 137-வது பாடலில், "திருவடியே சிவமாகும், திருவடியே சிவலோகம் சித்திக்கும், திருவடியே செல்லும் கதி, திருவடியே தஞ்சம்" எனக் கூறியுள்ளார். இறைவனை வணங்க அவனது திருவடியைப் பற்றுக் கோடாகக் கொள்ளவேண்டும். இது திருமூலர் கருத்து.

(ஆ) இதனையே திருவள்ளுவரும் பின்பற்றித் திருக்குறளில், முதல் அத்தியாயத்தில், இறை வணக்கத்தில் உள்ள பத்துக்குறள்களில் ஏழு குறள்களில் திருவடியையே கூறியிருக்கிறார். நான்கு குறள்களில் தாள்கள். அவை "வாலறிவன் நற்றாள், தனக்குவமை இல்லாதான் தாள், அறவாழி அந்தணன் தாள், எண் குணத்தான் தாள்" என நான்கு மூன்று குறள்களில் அடி. அவை "மலர்மிசை ஏகினான் மாணடி, வேண்டுதல் வேண்டாமை இலான் அடி, இறைவன் அடி ஆகிய மூன்று. ஆக திருவடி ஏழு.

(இ) பின்னர் இம்மரபில் தோன்றிய மணிவாசகர் விடுவாரா? திருவடியை. திருவாசகத்தில் முதல்பகுதியில் சிவபுராணத்தில் இறைவணக்கம் செலுத்தும் பொழுது "நமச்சிவாய வாழ்க, நாதன் தாள் வாழ்க, இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க, கோகழி யாண்ட குருமணிதன் தாள் வாழ்க, ஆகமமாகி நின்றண்ணிப்பான் தாள் வாழ்க" என்றே அவன் தாள்களைக் குறிப்பிட்டு வாழ்த்துகிறார். இதிலும் நான்கு தாள்கள், இத்தோடு விட்டாரா? வள்ளுவர் தாள்களோடு அடியையும் சேர்த்துக் கூறியிருக்கிறாரல்லவா! அதனையும் பின்பற்றி மணிவாசகர் அடுத்துக் கூறுகிறார்: "ஈசன் அடிபோற்றி, எந்தை அடிபோற்றி, தேசன் அடிபோற்றி, சிவன் சேவடி

போற்றி'' என்று இறைவனது திருவடிகளையும் குறிப்பிட்டுப் போற்றியிருக்கிறார்.

(ஈ) இந்த மரபில் வந்த திருநாவுக்கரசரை, சமணர்கள் நீற்றறையில் வைத்துப் பூட்டி, ''இந்நேரம் அவர் எலும்பும் சாம்பலுமாகியிருப்பார்'' என்று எண்ணிக் கதவைத் திறந்து பார்த்தபோது, அவர் உயிரோடு வெளியில் வந்தார். அங்கிருந்தோர் ''எப்படி உயிர் பிழைத்தீர்கள்'' என்று கேட்டதற்கு, ''என்னை இறைவனது திருவடி நிழலில் வைத்திருந்தேன், அந்த இறையடி நிழல் என்னைக் குளிரச் செய்தது, தகிக்கவில்லை'' என்றே கூறினார். எப்படி திருவடி?

(உ) அடுத்து திருஞானசம்பந்தர்.

திருவாவடுதுறைப் பதிகத்தில் ''இடரினும் தளரினும் எனதுறு நோய் தொடரினும் உன் கழல் தொழுதெழுவேன்'' என்றும், ''வாழினும் சாவினும் வருந்தினும் போய் வீழினும்உன் கழல் விடுவேன் அல்லேன்'' என்றும், இறைவனது திருவடியையே உறுதியாகப் பற்றியிருப்பதாகக் கூறியிருக்கிறார்.

(ஊ) சுந்தர மூர்த்தி சுவாமிகளும் ''மற்றுப்பற்றெனக் கின்றி நின்திருப் பாதமே மனம் பாவித்தேன்'' என்றும் ''தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்'' என்று தொடங்கி, ''அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்கும் அடியேன்'' என்று கூறித் திருவடியையே பற்றி முடித்திருக்கிறார்.

இந்த மரபைப் பின்பற்றியே, வள்ளலார் அவர்களும் ''திருவடிப்புகழ்ச்சி'' என்ற ஒரு பெரும்பாடலை மூன்றாந் திருமுறையிய் முதல் பாடலாகப் பாடியே தொடங்கியிருக்கிறார். அது மட்டுமல்ல, திருவடிப் பெருமை என ஆறாம் திருமுறையில் 45 பாடல்களையும் பாடியிருக்கின்றார்.

வள்ளலார் அந்தப் பாரம்பரிய மரபை விட்டுச் சிறிதும் விலகவில்லை என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.

இனி நமது சிந்தனைக்கு ஒரு கேள்வி. வாழையடி வாழையாக வந்த இத்தனை பேரும் ஏன் திருவடியையே நினைந்து அதனையே பற்றிப் போற்றியிருக்கிறார்கள்? ஏன் தலையை, முகத்தை, முடியை, மார்பை, கைகளைச் சொல்லவில்லை. சிந்தித்தால் ஒரு உண்மை புலப்படுகிறது; தலையை முகத்தைப் பார்த்தால் சிவன், விஷ்ணு, பிரமா, முருகன், விநாயகன், ஏசு, புத்தர் எனத் தெய்வங்களின் வேற்றுமைகள் புலப்பட்டுவிடுமாம்! திருவடி ஒன்றையே பார்த்து வணங்குவதால் எவ்வித வேற்றுமையும் தோன்றாது. யாருடைய திருவடி என்றும் தெரியாது. ஏன் இன்னும் ஒருபடி தாண்டிச் சிந்திக்கலாம், திருவடிகளை மட்டும் பார்த்து வணங்கும் பொழுது அது ஆண் திருவடியா? பெண் திருவடியா? என்றும் தோன்றாது. எப்படி இந்த வேற்றுமையற்ற வணக்கம்? வள்ளலார் கண்ட சமரச சன்மார்க்கம் இதுவே என்றாகிறது. இதுவும் திருமூலர் மரபிலிருந்து மாறவில்லை என்பதையே நமக்குக் காட்டுகிறது.

## 3. சாதி சமய பேதமில்லாமை

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பது ஏறத்தாழ 3000 ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த தமிழ்ப் பெருமகன் திருமூலரின் வாக்கு. இதையே பின்பற்றி, இதற்கு ஒரு விளக்கம் கூறுவது போல, வள்ளலார் தன் அருட்பாவில் ''ஒன்றே சிவமென்று உணர்ந்து இவ்வுலகமெலாம் நன்றே நடுமையுற்று நண்ணியே'' எனப் பாடியிருக்கிறார். இது உலக மக்களின் ஒருமைப்பாடு. வள்ளலார் இதற்கு ''ஆன்ம நேய ஒருமைப்பாடு'' எனப் பெயரிட்டிருக்கிறார்.

''சாதி, மதம், சமயம் எனும் சங்கடம்'' என்றும்

''சாதியிலே, மதங்களிலே, சாத்திரக் குப்பைகளிலே''

என்றும், சாதி, குலம், சமய வேற்றுமைகளைக் கண்டித்த பாடல்கள் பலவற்றை அருட்பாவில் காணலாம். இதுவும் மூலர் மரபையே காட்டுவதாகும்.

### 4. ஆயிரம் திருநாமம்

''ஒரு நாமம் ஓருருவம் இல்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடித் தெள்ளேணம் கொட்டாமோ'' என்பது நமது முன்னோர் கருத்து. இவ்வழியில் நமது திருநாவுக்கரசர் இறைவனது திருநாமத்தைப் பற்றி,

மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி மயானத்தான்
வார்சடையன் என்னின் அல்லான்
ஒப்புடையான் அல்லன் ஓர் ஊரான் அல்லன்
ஓர் உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே
கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இவன்
இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே

எனக் கூறியிருக்கிறார்.

இம் மரபைப் பின்பற்றி மாணிக்கவாசகர் இறைவனைப் பல பெயரிட்டு அழைக்கிறார். அவை ''சோதியன், துன்னிருள் தோன்றாப் பெருமையன், ஆதி அந்தம் நடுவு இம்மூன்றும் இல்லான், நோக்கரிய நோக்கு, நுணுக்கரிய நுண்ணுணர்வு, போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியன், காக்கும் எம் காவலன், காண்பரிய பேரொளி'' என்பன.

தாயுமான அடிகளும் இதே மரபைப் பின்பற்றி அரும்பொன், மணி, என் அன்பு, என் அன்பான அறிவு, அறிவில் ஊறும் ஆனந்த வெள்ளம், வேதம், வேதாந்தம், மேநக்க கேள்வி, பூமிக்குள் வித்து, வித்தின் விளைவு, கண், கருத்து, எண், எழுத்து, கதிக்கான மோனவடிவு என்று இறைவனுக்குப் பல்வேறு பெயரிட்டிருக்கிறார்.

இம் மரபைப் பின்பற்றியே நம் வள்ளலாரும், இறைவனுக்கு ஆயிரம் திருநாமங்களைச் சூட்டியிருக்கிறார். ஏன் அதற்கு மேற்பட்ட பெயர்களையும் அருட்பா ஒன்றில் தான் காணமுடியும். எடுத்துக்காட்டாகச் சிலவற்றை மட்டும் கூறுகிறேன்.

இறைவனது திருப்பெயர்கள்

1. அடை மொழிகளுடன் சில :- அவை ''அம்பலத் தரசு, ஆனந்தத் தேன், புலவரெல்லாம் புகழ்க் கண்ணியன், மலை தரு மயில், மடமயில், மதிமுக அமுது, உண்ணா ரமுது, சித்த சிகாமணி, குணப் பெருங் குன்று, ஞானதேசிக மாமணி, கண்ணனிக்கும் கண், களிப்பருளும் களிப்பு, மாற்றறியாத செழும் பசும்பொன் என்பன.

2. உறவின் முறையில் சில :- அவை, ஐயன், அப்பன் அண்ணன், அத்தன், தந்தை தாய், காதலன் என்பன.

3. சுவைக்கும் பொருள்களாகச் சில :- அவை, கற்பகக் கனி, கற்கண்டு, அமுது, தேன் பால், சர்க்கரை, கரும்பு, பாகு, பழம், கனிரசம் முதலியன.

4. காணக் கூடியவையாகச் சில :- அவை, அரசு, அமைச்சு, இளம்பிறை மான், மயில், குயில், குன்று, மலை, கடல், மயிர், சுடர், கண், சோலை, தரு, விளக்கு, சோதி, குரு, அழகு, அக்கரை, இக்கரை முதலியன.

5. கண்காணாப் பொருள்களாகச் சில :- அவை, சிவம், தவம், அருள், அன்பு, கருணை, நாதம், ஒலி, ஒளி, வெளி, மதி, கதி, நலம், கரம், உயிர் முதலியன.

6. செல்வப் பொருளாகச் சில :- அவை, பொன், மணி, முத்து, மாணிக்கம், இரத்தினம், நிதி, செல்வம், நன்மணி, நவமணி, சிவமணி, பொன்மணி முதலியன.

திருமறை :- இது ''அருட் பெருஞ்சோதி தனிப் பெருங் கருணை'' என்பது. இதை மகா மந்திரம் என்பர் வட மொழியினர். இதன் பொருள் 'இறைவன் ஒளிமயமான வன், அதுவும் பேரொளியினன், அதுவும் அருள் நிறைந்த பேரொளியினன் என்பதும், இறைவி, கருணை வடிவினள், அதுவும் பெருங் கருணை வடிவினள், அதுவும் ஒப்பற்ற பெருங் கருணை வடிவினள்' என்பது மாகும். இது மணிவாசகப் பெருமான் இறைவனை ''அம்மையே அப்பா'' என்றழைத்த வழிமுறையைப் பின் பற்றியது போலும்.

6. ஒளி வணக்கம்

(அ) தொல்காப்பியர் தன் நூலில் கொடிநிலை, கந்தழி, வள்ளி எனக் குறிப்பிட்டுள்ளார். இம் மூன்றும் திரி, எண்ணெய், அகல் என்பவற்றைக் குறிப்பன என்று பசுமலை டாக்டர் நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் கூறியிருக்கிறார். இது பழந்தமிழ் மக்களின் ஒளி வணக் கத்தைக் காட்டுவனவாகும்.

(ஆ) தமிழகத்தில் மிகப் பழமையான கோவில்கள் மூன்று. அவை, சிதம்பரம், திருவொற்றியூர், திருவாரூர். இம்மூன்றிலும் கடைசியாகத் தோன்றியது திருவாரூர்க் கோவில். இது தோன்றிய காலத்தை நமது சமயாச்சாரியார்

களில் ஒருவர், 'திசை எட்டும் திரிவதற்கு முன்னோ பின்னோ திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே' என ஐயத்தோடு கூறியிருக்கிறார். இதுவும் இன்று நேற்றுக் கூறியதல்ல. 1300 ஆண்டுகளுக்கு முன்பு கூறியது. கடைசிக் கோயில் தோன்றியதே தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு என்ற திசைகள் அமைவதற்கு முன்னோ பின்னோ என்று ஐயப்பாடு கொள்ளும் பொழுது, அதற்குமுன் தோன்றிய இரு கோயில்களின் காலத்தை எவ்வாறு அறிவது? இந்த மூன்று தொன்மையான கோயில்களிலும் கருவறையில் அதாவது மூலதானத்தில் உருவங்கள் ஒன்றுமே இல்லை. இம் மூன்றிலும் அக்காலந்தொட்டு இன்றும் ஒளி வணக்கமே நடைபெற்று வருகிறது.

(இ) திருக்கோயில்

இன்றுங்கூட கோயில்களில் மக்கள் வழிபடும் பொழுது உருவ வணக்கத்தின்முன் கற்பூர வழிபாடும், அடுக்கு விளக்கு வழிபாடும் நடைபெறும் பொழுதுதான் இறைவழிபாடு உச்சநிலையை யடைகிறது.

(ஈ) தைப்பூச விழா

தமிழ்மக்களின் விழாக் காலமெல்லாம் நிலாக்காலத்திலேயே நடைபெற்று வருகிறது. சித்திரைமாதம் சித்திரை நட்சத்திரம் முழுநிலா, வைகாசி விசாகம் முழு நிலா, ஆனி மூலம் முழுநிலா, ஆடி உத்தராடம் முழுநிலா, ஆவணி அவிட்டம் முழுநிலா, புரட்டாசி கலைவிழா பத்து நாட்களும் வளர்நிலா, கார்த்திகை மாத கார்த்திகை முழுநிலா, மார்கழி திருவாதிரை முழுநிலா, தைப்பூசம் முழுநிலா, மாசி மகம் முழுநிலா, பங்குனி உத்தரம் முழு நிலா. ஆக தமிழ் மக்களின் விழாக்காலமெல்லாம் நிலாக்காலத்திலேயே நடைபெற்று வருகின்றன.

வடலூரில் தைப் பூசத்தன்று முழுநிலாக் காலத்தில் சோதி வழிபாடு நடைபெறுகிறது. அங்கு சத்திய ஞான சபை தெற்கு நோக்கி இருப்பதால் மக்கள் வடக்கு நோக்கி நின்று சோதி வழிபாடு செய்கின்றனர். அப்போது மாலை நேரத்தில் அவர்களுக்கு வலதுபுறம் நிலவு ஒளியும், இடது புறம் ஞாயிறு ஒளியும், எதிர்ப்புறம் சோதி ஒளியும் தோன்றும். அன்று காலை நேரத்தில் ஒளி வணக்கம் செய்கிறவர்களுக்கு, வலதுபுறம் ஞாயிறு ஒளியும், இடதுபுறம் நிலவொளியும், எதிர்ப்புறம் சோதி ஒளியும் கிடைக்கும். இது இறைவனை முக்கண்ணனாக வழிபடும் முறையாகவும் அமையும். இக்காட்சி தைப்பூசத்தன்று கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். இதை வடலூரில் அன்றிப் பிற இடங்களில் காண இயலாது.

ஆக இந்த அருட்பெருஞ்சோதி ஒளிவணக்க வழிபாடு கூட பண்டைய பழந்தமிழ் மக்களின் ஒளிவணக்க மரபைச் சேர்ந்ததே யாகும்.

## 7. சுகத்திலுறும் பயன்

திருநாவுக்கரசரை சுண்ணாம்புக் காளவாயில் போட்டுப் பூட்டியபின், அவர் சாகாமல் வெளிவந்தபோது அவர் பாடிய பாடல் "மாசில் வீணையும் மாலை மதியமும் வீசுதென்றலும் வீங்கிள வேனிலும் மூசுவண்டறை பொய்கையும் போன்றதே ஈசன் எந்தை இணையடி நீழலே" என்பது. இப்பொருள்களைப் போலவே இறைவனது திருவடியும் எனக்குக் குளிர்ச்சியாக இருந்தது, அதனால் எனக்கு எவ்வித இடையூறுமில்லை என்பது இதன் பொருள். இதன் உள்ளே மற்றொரு புதை பொருளும் உண்டு. சிந்தித்தால் அதுவும் விளங்கும். அது ஐம்புலன்களுக்கும் குளிர்ச்சியைத் தருகிற ஐந்து பொருள்களை அடக்கி

யிருப்பது. மாசில் வீணை காதுக்குக் குளிர்ச்சி, மாலை மதியம் கண்ணுக்குக் குளிர்ச்சி, வீசு தென்றல் மூக்குக்குக் குளிர்ச்சி, வீங்கிளவேனில் உடலுக்குக் குளிர்ச்சி, மூசு வண்டறை பொய்கையின் நீர் நாவுக்குக் குளிர்ச்சி என்பது. எப்படி அவர் ஐம்புலன்களுக்கும் குளிர்ச்சியைத் தருகிற இவ்வைந்து பொருள்களைத் தேடிக் குறிப்பிட்டது.

வள்ளலார் தமது அருட்பாவில் 6-ம் திருமுறையில் அருள் விளக்க மாலையில் ஒரு பாடலைப் பாடியிருக்கிறார். அது,

கோடையிலே இளைப்பாறிக் கொள்ளும் வகை
கிடைத்த குளிர் தருவே! தரு நிழலே, நிழல்
கனிந்த கனியே.

இப்பாடலிலும் திருநாவுக்கரசர் பாடலில் உள்ளது போல ஒரு புதைபொருளைக் கண்டு மகிழலாம்.

அது, கோடையிலே இளைப்பாறிக்கொள்ளும் வகை கிடைத்த குளிர் காதுக்குக் குளிர்ச்சி, நிழல் கனிந்தகனி கண்ணுக்குக் குளிர்ச்சி, ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீர் நாவுக்குக் குளிர்ச்சி, உகந்த தண்ணீரிடை மலர்ந்த சுகந்த மணமலர் மூக்குக்குக் குளிர்ச்சி, மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்று உடம்புக்குக் குளிர்ச்சி என வள்ளலாரும், தமது அருட்பாவில் இறைவனை நம் ஐம் புலன்களுக்கும் குளிர்ச்சியைத் தருகின்ற ஐந்து பொருள் களாகக் காட்டி மகிழ்கிறார். எப்படி அருட்பா!

இந்த அளவுக்கு மட்டுமல்ல, வள்ளலார் இன்னும் ஒரு படி தாண்டி, இறைவனை, இவ்வைந்து பொருள்களால் விளைகின்ற சுகமாகவும் அதற்கு மேல் அடைகின்ற முக்திப் பேற்றைச் சுகத்திலுறும் பயனாகவும் கூறி மகிழ்கிறார்.

இதுவும் இந்தப் பாரம்பரிய வழி வந்ததாகவே தெரிகிறது.

இது காறும் கூறிய 7 செய்திகளாலும் வள்ளலார் மாறுபட்ட பாதையில் சென்றவரல்ல என்பதும், திருமூலர் காலந்தொட்டு வாழையடி வாழையாக வந்த ஒன்றுபட்ட பாரம்பரியத்தைச் சார்ந்தவர் என்றும், அவரது கொள்கைகளும் நெறிகளும் திருமூலர் காலந்தொட்டு சான்றோர்களால் கையாளப்பெற்று வருவன என்பதும், நன்கு புலப்படும்.

## வள்ளலார் பெற்ற பெரும் பேறு

வள்ளலார் அருட்பாவின் ஆறாம் திரு முறையில் சன்மார்க்க உலகின் ஒருமைநிலை என்ற தலைப்பில் அதன் இறுதிப்பாடலாக (5624ம் பாடல்)

நோவாது நோன்பெனைப் போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம் எனைப்போல் சார்ந்தவரும்—தேவாநின்
பேரருளை என்போலப் பெற்றவரும் இவ்வுலகில்
யார் உளர் நீ சற்றே அறை

என்ற பாடல் காணப்படுகிறது. "நோவாது நோன்பு என்னைப் போல நோற்றவர் யார்? சாகாத வரம் என்னைப் போலப் பெற்றவர் யார்? நின் பேரருளை என்போலப் பெற்றவர் யார்? எந்த உலகிலாவது யாராவது உண்டா? நீயே கூறு?" என்று இறைவனையே கேட்பதாக அமைந்திருக்கிறது இப்பாடல். இது அவரது பெரும்பேறு பெற்ற பெருமிதத்தையே காட்டுகிறது.

மற்றொரு பாடல் இன்னும் அதிகமான பேறு பெற்றதைக் காட்டுகிறது அது.

அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருந்த
உலகர் அனைவரையும்
சகத்தே திருத்தி சன்மார்க்க சங்கத்தடை வித்திட.
அவரும்
இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திடுதற் கென்றே
எனை, இந்த
உகத்தே இறைவன் வருவிக்க உற்றேன், அருளைப்
பெற்றேனே

என்பது இப்பாடலின் மூலம் வள்ளலார், தான் எதற் காகப் பிறப்பிக்கப் பெற்றேன்? எதற்காக வருவிக்கப் பெற் றேன்? எதற்காக இந்த அருளைப் பெற்றேன்? என்பன வற்றை அவரே கூறுவதாக உள்ளது. இப் "பா" அவரது தெளிவையும் மன உறுதியையும் பெற்ற பெரும்பேற்றை யும் நமக்குத் தெளிவாகக் காட்டுவதாகும்.

இறுதியாக, அவருடைய கொள்கைகளையும் அவர் வகுத்த நெறி முறைகளையும் அவர் எதிர்பார்த்த அள வுக்கு மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என உணர்ந்து, அவர் "கடை விரித்தேன் கொள்வாரில்லை" என்று கூறி, தைப் பூச நன்னாளில் சித்தி விளாகத்தில் ஒரு அறைக்குள் சென்று கதவை மூடி அருட்பெருஞ் சோதி ஆண்டவராகிய இறைவனோடு இரண்டறக் கலந்து விட்டார். இவ்வாறு அவர் சித்தியடைந்த நாள் 30-1-1874. இது இவ்வுடம் போடு இறைவனை அடையும் சித்தர் பெருமக்களின் முத்திப் பேற்றையே நமக்கு விளக்கிக் காட்டுவதாக இருக் கிறது. அவர் அன்று "கடைவிரித்தேன் கொள்வார் இலை' என்று கூறியது அவர் எதிர்பார்த்த அளவு இல்லை யென்பதுதான்.

என்றாலும் இன்று அவரது கொள்கைகள் தமிழ் நாட்டிலும், இந்தியாவிலும், ஆசியாக் கண்டத்திலும்

மட்டும் அல்ல, ஆஸ்திரேலியா, ஐரோப்பா, அமெரிக்காக் கண்டத்திலும் வெகு வேகமாகப் பரவி வருகின்றன.

ஆண்டுதோறும் வடலூரில் தைப்பூசத்தன்று 10 லட்சக்கணக்கான மக்கள் கூடி ஜோதி வழிபாடு நடத்துகின்றனர்.

உலகில் இனி கடும் நாஸ்திகத்திற்கோ, கடும் ஆஸ்திகத்திற்கோ இடம் இராது. எதிர்காலம் இனி சன்மார்க்கத்திற்குத்தான். காரணம் சன்மார்க்கம் எல்லா மார்க்கங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டு ஒளிவீசுவதேயாகும்.

இது வரை மிகவும் சுருக்கமாக, நேற்றும் இன்றும் வள்ளலாரது வரலாற்றையும், அருட்பாவின் சிறப்பையும் பற்றிக் கூறினேன்.

இறுதியாகக் கூறுகிறேன். "வள்ளலார் மக்களின் போக்கைக் கண்டு வாடினார், சமுதாயத்தின் குறைகளைக் கண்டு சாடினார். அவற்றைப் போக்க இறைவனது திருவருளைத் தேடினார். அதற்காக 5818 பாடல்களைப் பாடினார். தமது நெறிமுறைகளை மக்கள் ஏற்காதது கண்டு சித்திவிளாகத் தனி அறைக்குள் சென்று கதவை மூடினார். இறைவனோடு இறைவனாக இரண்டறக் கலந்து கூடினார்" என்ற சொற்களோடு இந்த எனது சொற்பொழிவை முடிக்கிறேன். இதற்கு வாய்ப்பளித்த பல்கலைக் கழகத்தினருக்கும், வந்திருந்து சிறப்பித்த பெருமக்களுக்கும் என் நன்றியும் வணக்கமும் உரியன.

முத்தமிழ்க் காவலர்

# கி. ஆ. பெ. விசுவநாதம் நூல்கள்

தமிழ்ச் செல்வம் ... ...
தமிழின் சிறப்பு ... ...
அறிவுக் கதைகள் ... ...
எனது நண்பர்கள் ... ...
வள்ளுவரும் குறளும் ... ...
வள்ளுவர் உள்ளம் ... ...
திருக்குறள் கட்டுரைகள் ... ...
திருக்குறளில் செயல் திறன் ... ...
திருக்குறள் புதைபொருள் (முதல் பகுதி) ...
திருக்குறள் புதைபொருள் (இரண்டாம் பகுதி) ...
மும்மணிகள ... ...
நான்மணிகள் ... ...
ஐந்து செல்வங்கள் ... ...
ஆறு செல்வங்கள் ... ...
அறிவுக்கு உணவு ... ...
தமிழ் மருந்துகள் ... ...
மணமக்களுக்கு ... ...
இளங்கோவும் சிலம்பும் ... ...
நல்வாழ்வுக்கு வழி ... ...
எண்ணக் குவியல் ... ...
வள்ளலாரும் அருட்பாவும் ... ...
மாணவர்களுக்கு ... ...
திருச்சி விசுவநாதம் வரலாறு ... ...

## பாரி நிலையம்

**184 பிராட்வே, சென்னை-600 108.**

---

Wrapper Printed at Eskay Art Printer's Madras-5.
Phone : 844727